# Sahadeva's Stratagem

## A TAMIL DRAMA

BY

**Rao Bahadur P. SAMBANDAM,**
B.A., B.L.

Author of:

" The Two Sisters," "Galava," "Manohara," "Blind Ambition," "The Two Friends," "Fate and Love," " Sarangadhara," " Simhalanatha," " Pushpavalli," "Amaladitya," "Magapathi," "Farces," "Siruthondar," "The Golden Fetters," "True Love," "The Bandit Chief," " Markandeya," " The Fair Ghost," " The Merchant of Vanipura," " The Wedding of Valli," "The Eve of Love," "Vijayarangam," "As you like it," "Ratnavali," "Lord Buddha," "The Tragedy of Silence," "The Good Fairy," "Geetha Manjari," "Harischandra," "As We Sow-So We Reap," "The Curse of Oorvasi," "Chandrahari," "The Demon Land," "Sabapathy Part I," "The Pongal Feast" or "Sabapathy" Part II, "A Rehearsal" or "Sabapathy" Part III, " Blessed-in a Wife," " The Dancing Girl " " Subbadra Arjuna " "Karna The Giver" etc. in Tamil, and " Harischandra," and " Yayathi " in English.

*FIRST EDITION.*

Madras:

INTED BY DOWDEN AND CO., AT THE "PEERLESS PRESS,"
21, Sunkurama Chetty Street.

1928



[Price per Copy

உ

# சகதேவன் சூழ்ச்சி

## ஒரு தமிழ் நாடகம்


ராவ் பஹதூர்

**ப. சம்பந்த முதலியார், பி-ஏ., பி-எல்.,**

அவர்களால் இயற்றப்பட்டது.


இந்த நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்ற நூல்கள் :

"லீலாவதி சுலோசனை" "கள்வர் தலைவன்," "மனோஹரன்,"
"இரண்டு நண்பர்கள்," "சாரங்கதரன்," "நற்குல தெய்வம்,"
"சத்ருஜித்," "யயாதி" "மார்க்கண்டேயர்," "விஜயரங்கம்,"
"காதலர் கண்கள்," "பேயல்ல-பெண்மணியே," "மகபதி,"
"மெய்க்காதல்," "பொன் விலங்குகள்," "சிம்ஹளநாதன்,"
"விரும்பிய விதமே," "சிறுத்தொண்டர்," "காலவரிஷி,"
"வாணீபுர வணிகன்," "ரஜபுத்ரவீரன்," "ஹரிச்சந்திரன்,"
"ரத்னாவளி," "புஷ்பவல்லி," "கீதமஞ்சரி," "பிரஹசனங்கள்,"
"ஊர்வசியின் சாபம்," "அமலாதித்யன்" "சபாபதி-முதல் பாகம்,"
"பொங்கல் பண்டிகை" அல்லது சபாபதி இரண்டாம் பாகம்,
"ஒர் ஒத்திகை" அல்லது சபாபதி மூன்றும்பாகம், "வள்ளிமணம்"
"முற்பகற்செய்யின் பிற்பகல் விளையும்," "புத்த அவதாரம்,"
"வேதாள உலகம்," "மனைவியால் மீண்டவன்," "தாசிப்பெண்"
"சுபத்திரார்ஜுனு" "கொடையாளி கர்ணன்" முதலியன.


முதற் பதிப்பு

சென்னை :
டௌடன் கம்பெனியாரின்
பியர்லெஸ் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1928




[விலை [redacted]

1-50

# Preface to the First Edition.

This drama is based on incidents mentioned in an old Edition of Mahabharata in Tamil.

All Societies, Professional and Amateur, are hereby informed that they will have to pay a royalty to me, before staging this or any other drama by me and get my permission, before doing so; otherwise they make themselves liable to be prosecuted for breach of copyright which is now made a criminal offence.

"PAMMAL LODGE"
G. T. MADRAS.
22nd Dec. 1928.

THE AUTHOR.

INSCRIBED

TO

THE BELOVED MEMORY OF

**MY PARENTS**

P. VIJIARANGA MUDALIAR,

and

P. MANICKAVELU AMMAL,

and

**MY FRIEND**

C. RANGAVADIVELU.

# சகதேவன் சூழ்ச்சி

## சகதேவன் (

### நாடக பாத்தி

| | | |
|---|---|---|
| ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி | ... | உ |
| தர்மராஜன்<br>பீமன்<br>அர்ஜுனன்<br>நகுலன்<br>சகதேவன் | ... | பஞ் |
| அரவான் | ... | அர் |
| கடோற்கஜன் | ... | பீம |
| துர்யோதனன் | ... | பா |
| சகுனி | ... | துர் |
| ஸ்வேதன் | ... | பா |
| தாம்ராட்சன்<br>தாம்ராட்சன் | ... | துர் |

*அரசர்கள், வாயிற்காப்போர்*

கதை நிகழ் இடம்:—உபலாவ்யம்.

கதை நிகழ் காலம்:—*துவாபரயுக முடிவு.*

ஸ்ரீ கிருஷ்
தர்மராஜ
பீமன்
அர்ஜுன
நகுலன்
சகதேவ
அரவான்
கடோற்க
துர்யோ
சகுனி
ஸ்வேதன்
தாம்ராட்
தாம்ராட்
கதை நிக
கதை நிக

# சகதேவன் சூழ்ச்சி

## முதல் அங்கம்

### முதற் காட்சி.

இடம்:—உபலாவ்யத்தில் சகதேவன் விடுதி.

கதவின் ஓரமாக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் சகதேவனும் நின்று பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

ச. ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி, நீர் சொன்னபடியே செய்கிறேன், எனக்கென்ன தட்சிணை கொடுக்கிறீர்?

ஸ்ரீகி. தட்சிணையா? நீயல்லவோ எனக்குக் கொடுக்கவேண்டும், உங்களுக்காக நான் இவ்வளவு கஷ்டப் படுவதெற்கெல்லாம்!

ச. உமக்குச் சேரவேண்டியதை தினம் நான் கொடுத்துக் கொண்டு தான் வருகிறேன். இப்படி எல்லாம் என்னை ஏமாற்றிவிட முடியாது. உம்முடைய சமாசாரம் எல்லாம் நன்றாய் அறிவேன் நான். நீர் கேட்டபடியே நான் நாள் வைத்துத் தருகிறேன், எனக்கென்ன கொடுக்கிறீர் சொல்லும்.

ஸ்ரீகி. உனக்கென்ன வேண்டும் கேள்.

ச. நான் கேட்பதைத் தருகிறேன் என்று சொல்லும் முன்பு.

ஸ்ரீகி. சகதேவா, நீ மனப்பூர்வமாகக் கேட்பதை நான் மறுப்பேனோ? என்ன வேண்டும் கேள் பார்க்கலாம்.

ச. கிருஷ்ண மூர்த்தி! நீர் இப்பொழுது கூறியதை மறக்காதீர். ஒரு சமயம்வரும் அப்பொழுது நான் கேட்டுக் கொள்ளுகிறேன்—நீர் விடைபெற்றுக் கொள்ளும், நேரமாகிறது.

ஸ்ரீகி. ஆம், நான் வருகிறேன். நாமிருவரும் பேசியது மிகவும் இரகசியமாய் இருக்கட்டும். துர்யோதனனுடைய சாரணர் எங்கும் மாறுவேடம் பூண்டு திரிவதாகக் கேள்விப்பட்டேன். அவர்களில் எவனாவது இதை அறிந்து தெரிவிப்பானாயின், சகுனி இதற்கேதாவது எதிராகச் சூழ்ச்சி செய்வான், ஒரு கால் துர்யோதனனையே உன்னிடம் அனுப்பித்தாலும் அனுப்புவான், அவர்கள் பக்கம் ஜெயமுண்டாகும்படியாக ஆயுதம் எடுக்க நாள் குறிக்கும்படி—ஜாக்கிரதை.

ச. அப்படியே ஆகட்டும். [ஸ்ரீகிருஷ்ணன் போகிறார், சகதேவன் ஆசனத்தில் உட்கார்ந்து சில ஓலைச்சுவடிகளை எடுத்துப்பார்க்கிறான்.] நாளை நன்றைக்கு—பூர்ண அமாவாசை—அதுதான் தக்கதினம்—ஒன்பது நாழிகைக்கு மேல் சரியாக இருக்கிறது—

வேலையாள் வருகிறான்.

வே. அரசே, தங்களைப் பார்ப்பதற்காக துர்யோதன ராஜன் வந்திருக்கிறார், வரலாமோ என்று கேட்டுவரச்சொன்னார்

ச. யார்?—துர்யோதன ராஜனா?

வே. ஆம். பிரம்பினாலாகிய சூத்திர அன்னப்பட்சியின் மீது ஆரோஹணித்து திடீரென்று வாயிலில் இறங்கினார்—யார் என்று நான் ஆச்சரியத்துடன் ஓடிப்போய்ப் பார்க்க, தன்னை இன்னாரெனத் தெரிவித்து, உம்மிடம் போய் சொல்லச் சொன்னார்.

ச. உம்—உள்ளே வரச்சொல். [வேலையாள் போகிறான்.] ஹா! கிருஷ்ணா! கிருஷ்ணா! உம்முடையமனம் போனபடியெல்லாம் செய்யும். என்ன செய்த போதிலும் உம்மை என்னவோ நான் விடப்போகிறதில்லை—

துர்யோதனன் வருகிறான்.

ச. வாருங்கள்! வாருங்கள்! அண்ணா! [நமஸ்கரிக்கிறான்.] உட்காருங்கள். [ஆசனம் கொடுக்கிறான்] ஏது இவ்வளவு தூரம் வரும்படியான சிரமம் தாங்கள்மேற் கொண்டது?

து. உன்னைத்தான் பார்த்து விட்டுப் போகலாமென்று வந்தேன்.

ச. மிகவும் சந்தோஷம், தன்யனானேன்! என்ன விசேஷமோ தெரிவிக்க வேண்டுகிறேன்.

து. சகதேவா, வேறொன்று மில்லை, நீ சகல சாஸ்திரசம்பன்னன் என்று உலகெங்கும் பிரசித்தி பெற்றிருக்கிறாய்! அன்றியும் அந்த சாஸ்திரங்களில் ஏதாவது கேள்விகேட்டால் உண்மையை ஒளியாது உரைத்திடுவாய் என்று பீஷ்மர் முதலியோர் உன்னைப்பற்றி புகழ்ந்திருக்கின்றனர்; ஆகவே சாஸ்திர விஷயமாக உன்னை ஒரு கேள்வி கேட்கலாமென்று வந்தேன்.

ச. நான் என்ன கற்றிருக்கின்றேன்? கற்றது கைமண்ணளவு, கல்லாதது உலகளவு என்றபடி சிறுவன் கற்றது சிறிதேயாகும்; ஆயினும் நான் அறிந்ததைச் சொல்லத் தடையில்லை.

து. மிகவும் சந்தோஷம், சகதேவா! நீ வாக்களித்ததை மறக்காதே, இப்பொழுது நான் உன்னைக்கேட்க வந்த விஷயம் ஈதாகும். பாண்டவர்களாகிய உங்களுக்கும், பாண்டவ வைரிகளாகிய எங்களுக்கும் நடக்கப் போகிற பாரதயுத்தத்திற்காக, எங்கள் படைகளை யெல்லாம் சேர்த்து விட்டோம் என்பது நீ அறியாத விஷயமன்று. அப்படைகள் ஆயுதமெடுத்து குருக்ஷேத்திரம் புகுவதற்கு சரியான லக்னம் எனக்குத் தெரிவிக்கவேண்டும். அந்த லக்னம் எப்படியிருக்க வேண்டுமென்றால், தர்மராஜன் தலையானது தரைமீது உருளும்படியானதாயிருக்க வேண்டும் —என்ன நகைக்கிறாய்?

ச. வேறொன்றுமில்லை, இவ்வுலகமென்னும் அரங்கத்தில் என்ன என்ன விந்தையான நாடகங்கள் நடக்கப்படுகின்றன என்று எண்ணினேன்.

து. நான் என்ன விளையாடுகிறேன் என்று எண்ணுகிறாயா என்ன?

ச. அப்படி நினைப்பேனா நான்?—உம்—சரி! இந்த கபட நாடகத்திற்கெல்லாம் சூத்திரதாரி ஒருவன் இருக்கிறானே, அவர் பாரம்!—அண்ணா, அப்படியே ஆகட்டும்—இதோ பார்த்துச் சொல்லுகிறேன். கொஞ்சம் இருங்கள்—

[போய் உட்கார்ந்து கணித்துப் பார்க்கிறான்.]

து. சகதேவா, எனக்கு நீ உண்மையை உரைக்க வேண்டும் மறவாதே.

ச. அண்ணா, நான் உமக்கு உண்மையை உரைக்காத சமயம் உமக்குகேதாவது ஞாபகம் இருக்கிறதோ?

து. இல்லை, இல்லை, வாஸ்தவம், அந்த நம்பிக்கையிருந்தபடியினால் தான் சத்ரு என்றும் பாராமல் உன்னிடம் நேராக இதைக் கேட்கவந்தது.

ச. சந்தோஷம்—அண்ணா, வரப்போகிற பூர்ண அமாவாசை அன்றிரவு ஒன்பது நாழிகைக்குமேல் விதிப்படி களபலி கொடுத்து பராசக்தியைப் பூசித்து, ஆயுதமெடுத்து குருக்ஷேத்திரம் புகுவீராகில், தர்மராஜன் தலை தப்பாமல் தரை மீது உருளும் நாளை நடக்கப்போகிற பாரத யுத்தத்தில்!

து. சபாஷ்! சகதேவா! மிகவும் சந்தோஷம். இதிலொன்றும் சந்தேகமில்லையே?

ச. சாஸ்திப்பிரகாரம் எள்ளளவும் சந்தேகம் கிடையாது.

து. சகதேவா, நீ கூறுவதைப்பார்த்தால், உன்மனதில் இதை பற்றி ஏதோ கொஞ்சம் சந்தேகம் இருக்கிறது போல் தோற்றுகிறதே, என்ன அது ஒளியாது சொல்.

ச. நான் ஒளிப்பதற்கொன்றுமில்லை, இருந்தாலும் ஒளியேன். நாம் செய்வதெல்லாம் மனுஷ்யயத்னம், தெய்வயத்னம் என்று ஒன்றிருக்கிறது என்று எனக்கு நினைப்பு வந்தது.

து. அதற்கு நான் பயப்படவில்லை—அந்த தெய்வமென்ன! தான் ஏற்படுத்திய சாஸ்திரங்களைப் பொய்த்துப்போகச் செய்யுமா என்ன?

ச. அந்த கேள்விக்குப்பதில் சொல்ல நான் சக்தியற்றவன். அதன்செயலை அறிந்தார் ஆர் இவ்வாருலகில்!

து. சரி, நேரமாகிறது, நான் வருகிறேன். ஜெயம் எங்கள் பக்கம் தான் என்பது கியாபகமிருக்கட்டும் உனக்கு.

ச. சரி, ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி எங்கள் பக்கம்தான் என்பது தங்களுக்கு கியாபக மிருக்கட்டும்.

து. சகதேவா, அந்த கிருஷ்ணன் ஒருவனால் என்ன முடியும் என்று நினைக்கிறாய்?

ச. அவர் ஒருவரால் எல்லாம் முடியுமென்று நாங்கள் நம்பி யிருக்கிறோம்.

து. பார்ப்போம் நாளை யுத்தத்தில்—நான் வருகிறேன்.

ச. அதற்கு சந்தேகமில்லை — வாருங்கள் —நமஸ்காரம்.

[துர்யோதனன் விரைந்து போகிறான்.]

காட்சி முடிகிறது.



## முதல் இடைக்காட்சி.

இடம்:—சகுனியின் வீடுதி.

கடோத்கஜன் தோன்றுகிறான்.

க. இந்த சகுனி ஏதோசூழ்ச்சி செய்கிறாய்போலிருக்கிறது. தனது சாரணர்கள் இருவரை இன்றிரவு தன்னைக் காணும்படி உத்தரவு செய்தான். இவனது சூழ்ச்சி இன்னதென்றறிந்து அதனை நாம் தடுப்பது நம்முடைய கடனாகும்—அதோவருகிறான், நாம் ஆகாசத்தில் அருவமாய் இருந்து நடக்கிறதைக் கண்டறிய வேண்டும்.

[மறைகிறான்.]

இறுமாகக் கொடுக்கச் செய்வேன் துர்யோதன மகாராஜனை, தவறு வீராயின் என் தண்டனைக் குட்படுவீர்கள் !

இருவரும். தங்கள் தயவு.

சக. நான் சொல்வதை கவனமாய்க் கேளுங்கள். நீங்கள் இருவரும் விராடராஜன் வேலையாட்களைப்போல் வேஷம் பூண்டு, விராடராஜன் அபிமன்யுவிற்குப் பணியாரங்கள் அனுப்பினுனென்று சொல்லி, ஒரு பெருங்கூடையில் பாதி பணியாரங்கள் நிரப்பி, அவனிருக்குமிடம் செல்லுங்கள்; அவனிருப்பிடம் போன உடன், ஒருவருமில்லாத சமயம் பார்த்து அவனைத் தோட்டத்திற் கழைத்து அப்பணியாரங்களைக் காட்டுபவர்கள் போல் அவனை அழைத்து, உடனே திடீரென்று அவன் வாயைப்பொத்தி கைகால்களைக்கட்டி அக்கூடைக்குள் அடைத்து முன் போல் அதைமூடி, இங்குகொண்டு வந்துவிடவேண்டும். அவனை உயிருடன் இங்கு கொண்டுவந்து ஒப்புவிப்பீர்களானால் அந்தட்சணம் உங்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ஊர், இல்லாவிட்டால் உங்கள் உயிர் !

தா. எங்களால் இயன்ற அளவு முயன்று பார்க்கிறோம்— ஆயினும் ஒரு சந்தேகம்; அர்ஜுன ராஜன் அபிமன்யுவிற்கு யுத்தப் பயிற்சி கற்பித்திருப்பதாகக் கேள்விப்படுகிறோம், அப்படி இருந்தால் நாங்கள் என்ன செய்வது ?

சக. பஞ்சைகளே ! ஒரு பச்சைப் பாலகனுக்கா பயப்படுகிறீர்கள் ! அப்படி ஏதாவதிருந்த போதிலும் அவன் ஆயுதம் எடுப்பதன்முன் அவன் கைகால்களைக் கட்டிவிடுங்கள். அப்படி உங்களுக்கு ஏதாவது பயமிருந்தால் அகோராட்சனையும் உங்களுக்குத் துணையாயனுப்புகிறேன்.

தா. தயவு செய்து அப்படியே செய்யுங்கள். எங்களுக்கும் கொஞ்சம் தைரியமாயிருக்கும்.

சகுனி வருகிறான்.

சகு. யுத்தத்தில் பாண்டவர்களை வெற்றிபெறுவோம் என்பது அசாத்தியமான காரியம்—மறுபடியும் சூதாட்டத்திற் கழைத்தால் சூடுண்ட பூனைபோல் வரமாட்டார்கள். இதற்கென்ன செய்வது? ஒரு யுக்திதான் தோன்று கிறது, நமது சாரணர்களைக் கொண்டு சிறுவன் அபிமன்யுவைக் கபடமாய்க் கவர்ந்து கொண்டு வந்துவிடுவோமாயின், பாண்டவர்கள் அவனை இறக்கவிடமாட்டார்கள், எப்படியும் நமது வழிக்கு வருவார்கள். அவனைச் சிறை மீட்கவேண்டின், மறுபடியும் ஒரு ஆட்டம் ஆடுவோம், நீங்கள் வென்றால் அபிமன்யுவை கொடுத்து விடுகிறோம், நாங்கள் வென்றால் உங்கள் குடும்பத்தோடு முன் போல் பதினொருவருடம் வனவாசமும், ஒருவருடம் அக்ஞாத வாசமும் போக வேண்டுமென்று கேட்டு விடுவோம். இது தான் சரியானயுக்தி—யாரடா அங்கே சேவகா?

ஒரு சேவகன் வருகிறான்.

நான் நமது சாரணர்கள் இருவரை வரச்சொன்னேன்; வந்திருக்கிறார்களா பார்—

சே. அவர்கள் இப்பொழுது தான் வந்தார்கள்.

சகு. சரி, அவர்களை உள்ளே வரச்சொல்—நான் அவர்களுடன் பேசிக்கொண்டிருக்கும் பொழுது வேறு ஒருவரையும் உள்ளே விடாதே!

சே. சித்தம். [போகிறான்.]

தூம்ராட்சன், தாம்ராட்சன் வருகிறார்கள்.

இருவரும். சௌபல ராஜனே நமஸ்காரம்.

சகு. தாம்ராட்சா, தூம்ராட்சா, உங்களிருவருக்கும ஒரு முக்கியமான கட்டளையிடப்போகிறேன், அதன்படி செய்து முடிப்பீராயின், உங்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு ஊர்

சகு. அப்படியே ஆகட்டும். அஞ்சாதீர்கள், புறப்படுங்கள் உடனே. இதை ஒருவருக்கும் வெளியிடாதீர்கள்.

இருவரும். தங்கள் சித்தம் [போகிறார்கள்.]

சகு. இந்த யுக்தியை நமது மருகனிடம் போய்த் தெரிவிப்போம். [போகிறான்.]

க. [ஆகாயத்தினின்றும் குதித்து] அப்படியா சமாசாரம் சௌபலனே! நான் ஒருவன் இருக்கிறேன் என்பதை மறந்தாய் போலும்! முன்பு நீ செய்த சூழ்ச்சியைக் கெடுத்து அபிமன்யுவிற்கு உத்தரையைக் கலியாணம் செய்து வைத்த எனக்கு, இப்பொழுது அவனுக்கு இந்த இடர் நேரிடாவண்ணம் காத்து, உன்னுடைய எண்ணத்தில் கல்லைப் போடத்தெரியும்! இந்த அகோராட்சன் இவர்களைப்பின் தொடராமல் தடுத்து, அவனுருக்கொண்டு, இவ்விருவர்களையும் வஞ்சித்து அபிமன்யுவைக்காத்து, இவர்களுக்கும் சிட்சை பண்ணிவைக்க வேண்டும். சௌபலனே! பார்ப்போம் யார் ஜபம் சாய்கிறதோவென்று! [மறைகிறான்.]

காட்சி முடிகிறது.



# முதல் அங்கம்

## இரண்டாங் காட்சி.

இடம்:—அரவானுடைய விடுதி.

காலம்:—இரவு.

அரவான் தன் வாளின் கூர்மையைப் பரிசோதித்துக் கொண்டிருக்கிறான்.

ஸ்ரீகிருஷ்ணன் வருகிறார்.

அ. வாருங்கள் மாமா! ஏது இவ்வளவு தூரம் வந்தது? அதுவும் இந்த வேளையில்?

ஸ்ரீகி. வேறொன்றுமில்லை, நித்திரை யில்லாமல் இப்படி உலாவிக் கொண்டு வந்தேன். இவ்வறையில் வெளிச்சமிருப்பதைக் கண்டு, இச்சமயத்தில் யார் விழித்துக்கொண்டிருப்பது என்று ஆச்சரியப்பட்டு பிரவேசித்தேன். என்ன செய்து கொண்டிருக்கிறாய் குழந்தாய்?

அ. என் வாளைத் தீட்டிக்கொண்டிருக்கிறேன்.

ஸ்ரீகி. எதற்காக குழந்தாய்?

அ. எதற்காகவா? பாரத யுத்தத்தில் பதினொரு அக்குரோணிப் பகைவரை பரலோகம் அனுப்புவதற்கு!

ஸ்ரீகி. குழந்தாய், பெரியவர்களாகிய நாங்கள் இருக்கிறோம் அதற்கு, குழந்தைகளாகிய நீங்கள் இதை மேற் கொள்ளலாகுமோ?

அ. என் தம்பி அபிமன்யு மாத்திரம் சண்டை போடலாகுமோ?

ஸ்ரீகி. அவனுக்கும் நான் சொல்லிப் பார்த்தேன் வேண்டாமென்று, அவன் ஒரே பிடிவாதமா யிருக்கிறான். அவனைப் போல் நீயும் பிடிவாதம் செய்யாதே, நான் சொல்வதைக் கேள், குழந்தை—

அ. குழந்தை ! நானு குழந்தை ? மாமா, நான் சொல்வதைக் கேளும் சற்று. இன்றைத்தினம் சபையில் ஏதோ நீங்களெல்லாம் சேர்ந்து பாரத யுத்தம் பதினெட்டு நாள் நடக்கும் எனத் தீர்மானித்தீர்களாமே, பதினெட்டு நாட்கள் என்னத்திற்கு என்று நான் கேட்கிறேன்? குழந்தை குழந்தை யென்று என்னை ஏளனம் செய்கிறீரே, இந்தக் குழந்தையை யனுப்பும், அரை நாளில் பகைவர் அனைவரையும் ஹதம் செய்து வருகிறேன் பாரும்! என்ன சொல்லுகிறீர் ?

ஸ்ரீகி. நீ பேசும் தைரியத்தைப் பார்த்தால் நீ அப்படியே செய்து முடிப்பாயென்று தோன்றுகிறதப்பா, என்ன இருந்தபோதிலும் அர்ஜுனனுடைய குமாரன் அல்லவா நீ—ஆயினும் ஒரு வேளை உயிரிழக்கவேண்டி வந்தால்?

அ. அதைவிட மேலான கீர்த்தி எனக்கு என்ன வேண்டும்? அர்ஜுனன் குமாரனுகிய அரவான், தன் தந்தையரின் பொருட்டு தரணியில் தன்னுயிரைக் கொடுத்தான் என்னும் பெயர் உலகுள்ளளவும் ஊர்ஜிதமாயிருக்குமல்லவா ? உமக்கேதாவது இதில் சந்தேகமுண்டா ?

ஸ்ரீகி. கண்ணே! எனக்குக் கொஞ்சமேனும் சந்தேகமில்லை. ஆயினும் உன் வாயினின்றும் அவ்வாறு மொழியக் கேட்டு சந்தோஷப்பட வேண்டுமென்று இச்சை கொண்டேன். நெடுநேரமாயிற்று உறங்கப்போ—நாளை நமக்கு வேலை யிருக்கிறது—நான் வருகிறேன்.

அ. வாருங்கள். [ஸ்ரீகிருஷ்ணன் போகிறார்.]

மாமா ஏதோ சூழ்ச்சி செய்கிறார், தெரியவில்லை, சோழியன் குடுமி சும்மா ஆடாதென்பது போல; இல்லாவிட்டால் இச்சமயம் நம்முடைய விடுதிக்கு வரமாட்டார்.

துர்யோதனன் வருகிறான்.

அ. யார் அது ?

து. அப்பா, அரவான், நான்தான் உன் பெரிய தந்தையாகிய துர்யோதனன்.

அ. வாருங்கள்!—உட்காருங்கள்!—ஏது இவ்வளவு தூரம் வந்தது?

து. அப்பா, உன்னிடம் ஒரு வரம் நாடி வந்தேன், அதை நீ கொடுக்கவேண்டும்.

அ பெரிய அப்பா, பகைவனென்றும் பாராமல், என்னிடம் வந்து நீர் ஒன்று கொடுக்கவேண்டும் என்று கையிரந்து வேண்ட, அதை நான் மறுப்பது தர்மமன்று. ஆயினும் நீர் கேட்பது இரண்டு நிபந்தனைக்களுக்கு உட்பட்டிருக்கவேண்டும். முதலாவது பாரத யுத்தத்தில் உங்களையும் உங்களைச் சேர்ந்தவர்களையும் நான் கொல்லலாகாது என்று கேட்கக்கூடாது, இரண்டாவது நீர் கேட்பது நான் தர்மப்படி கொடுக்கக்கூடியதா யிருக்க வேண்டும்.

து. அப்படியே ஆகட்டும்.

அ. ஆனல் கேளும்.

து. வேறொன்றுமில்லை, யுத்தத்திற்குமுன் நடக்கவேண்டிய காரியங்களில் உன் உதவி கொஞ்சம் வேண்டியிருக்கிறது.

அ. கேளும் என்றேனே.

து. யுத்தத்திற்கு முன் களபலி கொடுத்தல் என்று முக்கியமான கிரியையுண்டல்லவா? அக்களபலிக்குரிய தகுந்த லட்சணங்கள் அமைந்தவர்கள் எங்களில் ஒருவருமில்லை. உன்னிடம் அதற்குரிய லட்சணங்களெல்லாம் அமைந்திருக்கின்றன என்று பீஷ்மர் முதலியோர் சொல்லக் கேள்விப்பட்டேன். ஆகவே அதற்குடன்பட வேண்டும் நீ, என்று கேட்க வந்தேன். நீ எனக்குக் கூறிய வார்த்தையைப் பொய்த்திடச் செய்யலாகாது.

அ. [சற்று உற்றுப் பார்த்து, பிறகு கலகல என்று நகைத்து] பெரிய அப்பா! உம்முடைய பெரும் தைரியத்திற்கு மெச்சி

னேன்! இந்த அரவான் உயிரோடிருந்தால் நம்மை யெல்லாம் பாதிநாளில் படுசூரணமாக்கி விடுவான் என்று பயந்து இந்த யுக்தி எடுத்தாற் போலிருக்கிறது; இது வரையில் இந்த மண்ணைக் கட்டிக்கொண்டு ஆண்டது போதாது, குலத்திற் பிறந்த பிள்ளையைப் பலி கொடுத்தாவது இன்னமும் இப்பாரை ஆளவேண்டுமென்று ஆசை யிருக்கிறுற்போலிருக்கிறது! வாய் கூசாமல் இவ் வார்த்தையைக் கேட்டீரே! இவ்வளவு கஷ்டமேன் உமக்கு? இந்தப் பாழும் பூமியைத் தானே ஆளவேண்டும் நீர்? வாரும் என்னுடன், என் பெரிய தந்தையிடம் அழைத்துச் செல்லுகிறேன், வாரும், அவரிடம் போய் தேகியென்று கையிரந்து கேளும், இப்பார் முழுவதும் உமக்கு தானமாகக் கொடுப்பார் பாரும்.

து. ஒரு காலும் என்னுயிர் உள்ளளவும் அதற்கு உடன் படேன்.

அ. என்னுயிரைக் கேட்க மாத்திரம் உடன்பட்டீர் போலும்!—பெரிய அப்பா! அப்படியே ஆகட்டும். வணங்காமுடி மன்னனெனப் பெயர் பெற்ற நீர் உமது தலையை வணக்கி என்னிடம் கையிரந்து கேட்க நான் மறுக்க மாட்டேன். அன்றியும் நான் கொடுத்த வாக்கினின்றும் தவறமாட்டேன்.

து. சந்தோஷம்—அப்பா, எப்பொழுது நீ களபலிக்கு வர வேண்டுமென்பதை நான் நாளை சொல்லி யனுப்புகிறேன். நீ உன் வார்த்தை தவருமல் வந்து சேரவேண்டும்.

அ. அப்படியே ஆகட்டும். ஆயினும் பெரிய அப்பா, ஒன்று ஞாபகமிருக்கட்டும். நீரிற்குமிழியாக்கை என்பது போல் நிலையற்றது இத்தேகம். அது வரையில் இவ்வுடல் என்னுடையதாயிருந்தால் அதற்குடன்படுகிறேன், சம்சயம் வேண்டாம்—பெரிய அப்பா, உமது மனோரதம் பூர்த்தியாயிற்ரு? இனி விடை பெற்றுக் கொள்ளலாமே!

து. சரி, நான் வருகிறேன். [புறப்படுகிருன்.]

அ. போய் வாருங்கள்—ஆயினும் போகுமுன் தயவு செய்து ஒரு சந்தேகம் நிவர்த்தி செய்து விட்டுப் போகவேண்டும். ஒருவன் விரலைக் கொண்டே அவன் கண்ணைக் குத்திக் கொள்ளச் செய்வது போல், உமக்கு இந்த யுக்தி யார் கற்பித்தது, உமது சகுனி மாமாவோ ?

து. அதெல்லாம் உனக்கென்னத்திற்கு ? நீ வாக்களித்ததை மறக்காதே !

அ. உம் !—எங்கள் பக்கம் ஸ்ரீ கிருஷ்ணன் என்று எங்கள் மாமா ஒருவர் இருக்கிறார் என்பதை மறவாதீர் !

[துர்யோதனன் போகிறான்.]

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் இடைக் காட்சி.

இடம்:—அபிமன்யுவின் விடுதிக் கடுத்த ஓர் தோட்டம்.

தூம்ராட்சனும், தூம்ராட்சனும்

ஒரு பெரிய கூடையைத் தூக்கிக்கொண்டு வருகின்றனர்.

தூ. இறக்கடா இங்கே ! இந்த பளுவை எத்தனை தூரம் தூக்கிக்கொண்டு வருவது! [இறக்குகின்றனர்.]

து. ஏனடா ! இப்பவே இவ்வளவு கஷ்டப்பட்டோமே, இன்னும் திரும்பிப் போகும்போது இதுக்குள்ளே அபி மன்யுவையும் தூக்கிக்கினு போவணுமேடா, அதுக் கென்ன செய்யாது ?

தா. அந்த அகோராட்சன் வந்தாலும் நமக்கு கொஞ்சம் சுலபமாயிருக்கும். நமக்கு ஒய்ந்தால் ஒரு கை கொடுப்பான். அந்தப்பாவி, என்ன இது கஷ்டமான வேலை, தலை போனாலும் போகுமென்று, தப்பித்துக் கொண்டானோ என்ன ?

கடோற்கஜன் திடீரென்று அகோராட்சன் ரூபத்துடன் அவர்கள் எதிரில் தோன்றுகிறான்.

க. அப்படிச் செய்வேனா தம்பி நானு !

தா. அடடா ! எங்கேயடா அப்பா திடீரென்று முளைத்தாய் ?

தா. எப்படியாவது வந்து சேர்ந்தாயே அப்பா அது போதும்.

தா. இத்தனை காலம் எங்கிருந்தாய் ?

க. உங்கள் பின்னால் தான் வந்து கொண்டிருந்தேன். நீங்கள் புறப்பட்டவுடனே சௌபலன் என்னை அழைத்து சமாசாரத்தைக் கூறி உங்களுக்குத் துணையாகப் போகச் சொன்னார். நான் உடனே உங்களைப் பின் தொடர்ந்தேன். உங்கள் பின்னாலேயே சற்று தூரமாக வந்து கொண்டிருந்தேன். என்னைக் கண்டுபிடிக்க முடியவில்லையே உங்களால்! மடையர்களே ! நான் செய்ததை நம்முடைய பகைவர்களில் ஒரு சாரணன் ஒருவன் செய்திருந்தால் உங்கள் கதி என்னவது ! இனியாவது ஜாக்கிரதையாகப் பிழையுங்கள்—சரி, மேல் நடக்கவேண்டியதைப் பார்ப்போம். என்ன இங்கே இறக்கி விட்டீர்கள் இதை ?

தா. இதிலே ஒரு கஷ்டமிருக்கிறதப்பா, இந்தப் பலகாரத்துடன் இதை இவ்வளவு தூரம் தூக்கிக்கொண்டு வந்ததே எங்கள் பாடுபோதும் போதுமென்றாயது. இனி அபிமன்யுவைப் பிடித்து இதில் அடைத்து வந்தவழி தூக்கிக் கொண்டு போவதென்றால் மிகவும் கஷ்டமாயிற்றே என்று யோசிக்கிறோம். நீ எங்களைப் பார்க்கிலும் மூத்தவன், இத்தொழிலில் நிகரில்லையென்று கை தேர்ந்தவன். இதற்கு நீதான் ஒரு யுக்தி செய்யவேண்டும்.

க. எனக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது, இதைப் பரிசோதித்துப் பார்த்த பாண்டவர்களுடைய சாரணர்களையெல்லாம் ஏமாற்றியாயது, இனி இந்தப் பணியாரம் என்னத்திற்கு? இதை நாம் மூவருமாகப் புசித்துவிட்டால் பளுவு குறைந்துபோகும்.

தா. நாங்கள் சாப்பிட்டாயிற்று வயிறு நிரப்ப, இனி ஒரு கவளமும் எங்களால் தின்னமுடியாது

க. எனக்குப் பசியாயிருக்கிறது. நான் கொஞ்சம் சாப்பிட்டுப் பார்க்கிறேன்.

தூ. தாராளமாய்ச் செய். [கடோற்கஜன் தின்ன ஆரம்பிக்கிருன்.] உனக்கு இஷ்டமான அளவு புசி. நீ ஒரு வாரம் புசித்தாலும் மாளாது, பாதி கூடை பலஹாரம் நிரம்பியிருக்கிறதே!

தா. என்னடா! அது, கூடை ஆடுகிறது! [உள்ளே பார்த்து] அடடா! பாதி பலஹாரம் மாண்டு போய் விட்டதடா! எப்படித் தின்கிருன் பார்!

தூ. ஏனடா அப்பா! நீ என்ன பேயா, பிசாசா! இப்படித் தின்கிருயே! நீ ஒரு ராட்சசனுகப் பிறந்திருக்கவேண்டும்!

க. [தின்று கொண்டே] அப்படித்தான் எனக்கும் தோன்றுகிறது.

தா. அடே அப்பா! எல்லாவற்றையும் தீர்த்து விடாதே! கொஞ்சம் வைத்துவை. அபிமன்யு வந்து பார்த்தால் ஒன்றுமில்லா திருக்கக் கூடாது!

க. [கூடையினின்றும் தலையைத் தூக்கி] என்னடா அது! படுக்காளிப் பயல்களே! கொண்டுவந்தவர்கள் இன்னும் கொஞ்சம் அதிகமாகக் கொண்டுவந்திருக்கக்கூடாதா! இவ்வளவுண்டு கொண்டு வந்து விட்டு, அதிலும் கொஞ்சம் மிகுத்திவை என்கிறீர்களே!

தூ. அப்பா! அந்த மட்டும் கொஞ்சமாவது மிகுத்து வைத்தாயே!

தா. என்ன வயிறடா அப்பா உனக்கு ! பாம்பு வயிறு ! இவ்வளவையும் சாப்பிட்டும் அப்படியே இருக்கிறதே !

து. அந்த மட்டும் கூடை பளுவு எல்லாம் குறைந்து விட்டதே !

தா. முன்புபோல் அதை மூடி விடுவோம். [அவ்வாறே செய்து] இது சரிதான், இனி அந்த அபிமன்யுவைப் பிடிக்கவேண்டுமே— அதற்கென்ன செய்வது ?

து. அகோராட்சா, நீதான் அதற்கு ஒரு யுக்தி சொல்ல வேண்டும்.

க. நான் சொல்லுகிறபடி செய்யுங்கள். நீங்கள் இங்குதானிருங்கள், நான் மெல்ல அவனிடம் போய் உங்கள் மாமனார் உமக்கு பலஹாரம் அனுப்பி யிருக்கிறார், அதை உங்களுக்குக் காண்பித்து விட்டு, அரண்மனைக்கு எடுத்துக் கொண்டு போகும்படிச் சொன்னார்கள், என்று சொல்லி, இங்கு அனுப்புகிறேன். அவன் வந்ததும் ஒருவன் வாயைப் பொத்தி விடுங்கள், மற்றொருவன் கையைக் கட்டி விடுங்கள், பிறகு இருவருமாக இக்கூடைக்குள் அவனைப் போட்டு, மூடி எடுத்துச் செல்லுங்கள் சௌபலன் அரண்மனைக்கு, நான் அருகில் இருந்தால் ஏதாவது சந்தேகப்படுவான். ஆகவே பின்னால் வருவதுபோல் மறைந்து, சகுனியின் அரண்மனையில் உங்களை வந்து சந்திக்கிறேன். பிறகு நம்முடைய பாடு கொண்டாட்டம் தான் !

தா. ஆம் ஆம். அப்படியே செய், நல்ல யுக்திதான்—

க. அவன் சின்ன குழந்தை, பாவம், அதிகமாகக் கஷ்டப்படுத்தாதீர்கள்.

து. இல்லை இல்லை, நீபோ, சீக்கிரம்.

[கடோற்கஜன் போகிறான்.]

தா. என்னமாடா அவ்வளவு பலஹாரத்தைத் தின்றான் அவன் !

தூ. அது ஒரு மாதிரியான வியாதியடா, என்ன தின்றாலும் பசி அடங்குகிறதில்லையாம்.

தா. அபிமன்யு வந்த உடன் நான் இந்த மூடியை எடுத்துக் காட்டுகிறேன். அவன் உள்ளே பார்க்கும் சமயத்தில் நீ அவன் வாயைக் கட்டிவிடு, நான் கையைக் கட்டி விடுகிறேன். ஜாக்கிரதை! அதோ வருகிறான் போலிருக்கிறது.

கடோற்கஜன் அபிமன்யு உருவத்துடன் வருகிறான்.

க. எங்கேயடா அப்பா, என் மாமனார் அனுப்பி வைத்த பலஹாரம்?

தா. இதோ இக் கூடையில் வைத்திருக்கிறது.

[மூடியைத் திறந்து காட்டுகிறான், கடோற்கஜன் உள்ளே பார்ப்பதுபோல் குனிய, அவன் வாயை தூம்ராட்சன் கட்டி விடுகிறான், தாம்ராட்சன் அவன் கையைக் கட்டிவிட, இருவருமாக அவனைத் தூக்கி அக்கூடையில் போட்டு மூடி விடுகிறார்கள்.]

தூ. ஏதாவது சப்தம் கிப்தம் போட்டாயா, அப்படியே ஆற்றில் போட்டுவிடுவோம்!

[இருவருமாகத் தூக்கிக்கொண்டு போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



# முதல் அங்கம்

## மூன்றாம் காட்சி.



இடம்:— உபலாவ்யத்தில் தர்மராஜன் விடுதி.

தர்மராஜன், பீமன், அர்ஜுனன், நகுலன், சகதேவன், சுவேதன், அரவான் முதலியோரும் மற்ற அரசர்களும் வீற்றிருக்கின்றனர்.

த. அர்ஜுனா, என்ன கிருஷ்ண மூர்த்தி இன்னும் சபைக்கு வரவில்லை.

அர். நான் இங்குவரும் பொழுது அழைத்தேன், நீமுன்புபோ பிறகு நான் வருகிறேன் என்று சொன்னார்.

சு. தர்மராஜனே, நம்முடைய பட்சம் இருக்கும் வீரர்களை எல்லாம் வகுத்த முறையினைக் கூறுகிறேன், அதில் ஏதாவது மாற்ற வேண்டியிருந்தால் தங்கள் அபிப்பிராயத்தை தெரிவிக்கவேண்டுகிறேன்.

த. சேனாபதி, சற்றுபொறும். கிருஷ்ணமூர்த்தி வந்தவுடன் தெரிவியும். அவருடைய அபிப்பிராயத்தைத் தான் முக்கியமாக நாம் எல்லோரும் கேட்கவேண்டும். அவர்சீக்கிரம் வந்து விடுவாரென்று நினைக்கிறேன். வந்தவுடன்— இதோ வந்து விட்டார்!

ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி வருகிறார்.

த. வரவேண்டு, வரவேண்டும்! கிருஷ்ணமூர்த்தி! [எல்லோரும் அவருக்கு நமஸ் கரிக்கின்றனர்; கிருஷ்ண மூர்த்தி ஒரு மூலையிற் போய் உட்காருகிறார்.] ஸ்வாமி! இதென்ன புதுமையாயிருக்கிறது! இன்றைக்குத் தாங்கள் சாதாரணமாக உட்காரும் அரி ஆசனத்தை விட்டு ஒரு மூலையில் உட்காரவேண்டிய காரணம் என்ன?

ஸ்ரீகி. நான் எங்கு உட்கார்ந்தாலென்ன?

த. ஸ்வாமி, உடம் பேதாவது அசௌக்கியமோ ?

ஸ்ரீகி. உடம்பு இதுவரையில் சௌக்கியமாகத் தானிருக்கிறது.

த. தாங்கள் கூறுவது எனக்குப்புலப்படவில்லை. மனதில் ஏதாவது அசௌக்கியமோ தங்களுக்கு ?

ஸ்ரீகி. மனசு எப்பொழுதும் இருக்கிறபடி தானிருக்கிறது !

த. கிருஷ்ணமூர்த்தி ! தாங்கள் ஏதோகோபம் கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. ஸ்வாமி! நான் ஏதாவது தெரிந்தும் தெரியாமலும் பிழை இழைத்தேனு, எனது தம்பிமார்கள் ஏதேனும் தவறு இழைத்தார்களா, அல்லது மற்றுமுள்ள அரசர் முதலியோர் ஏதேனும் தமது மனம் கலங்கச் செய்தார்களா ? தயைகூர்ந்து தெரிவித்தருள வேண்டும், அப்படி ஏதாவது இருக்குமாயின், அதற்குத்தக்க பிராயச்சித்தம் செய்யக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

ஸ்ரீகி. நீங்கள் ஒன்றும் தவறு இழைக்கவில்லை, செய்வதெல்லாம் நான் தானே !

த. ஸ்வாமி ! தமியேனைத்தாங்கள் இவ்வாறு பரிசோதிப்பது தர்மமா ? இன்னதென்று கூறுமே.

ஸ்ரீகி. சமயம் வரும் பொழுது சொல்லுகிறேன். இப்பொழுது கால தாமதம் செய்யலாகாது. நாளையுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைப்பற்றி யோசியுங்கள்.

த. தங்கள் சித்தம் ! சேனுபதி, தாம் நமது வீரர்களை யெல்லாம் வகுத்ததைத் தெரிவியுங்கள், எங்கள் குலதெய்வத்திற்கு.

ஸ்ரீகி. குலதெய்வத்திற்கென்னவோ குறைச்சல் இல்லை !

சு. அப்படியே—பீமன், அர்ஜுனன், அபிமன்யு, சாத்தகி, திருஷ்டத்துய்மன், அரவான், என்னுடன், இவ்வெழுவர்களையும் அதிரதர்களாகவும், சிகண்டி, விராடன் தர்மராஜன், பாஞ்சாலன், இந்நால் வரையும் மகாரதத்தலைவராகவும், உத்தமோசா, உதார்மனு, நகுலன், கடோற்க

ஜன், இந்நால்வரையும் சமரதத்தலைவராகவும், சகதேவன், அஞ்னவர்மா, இளப்பஞ்ச பாண்டவர்கள் மற்றுமுள்ள அரசகுமாரர்களை அர்தரதத்தலைவராகவும் வகுத்துள்ளேன்—தங்கள் அபிப்பிராயம் இவ்விஷயத்தில் எப்படியோ?

ஸ்ரீகி. சேனாபதி, என்னையேன் கேட்கிறீர்கள்! சகல சாஸ்திரங்களிலும் வல்லவனாகிய சகதேவனைக்கேளுங்கள்.

த. சகதேவா, என்ன கிருஷ்ணமூர்த்தி என்றுமில்லாவண்ணம் இப்படி கூறுகிறார் இன்றைக்கு, நீ ஏதாவது அவருக்கு அபசாரம் செய்தாயா?

ச. அண்ணா, என் உள்ளம் அறிய நான் ஒரு அபசாரமும் செய்யவில்லை.

ஸ்ரீகி. சத்தியத்திற்குட் பட்டவன் சகதேவன், அவன் தவறிழைப்பானா என்ன?—அது கிடக்கட்டும். நீங்கள் எல்லாம் குருக்ஷேத்திரத்திற்கு எப்பொழுது புறப்படப்போகிறீர்கள்?

த. ஹரி ஹரி! நான் என்ன வார்த்தை கேட்கிறேன்! ஹே! கிருஷ்ணமூர்த்தி! தாங்கள் இல்லாமல் நாங்கள் மாத்திரம் குருக்ஷேத்திரம் போவதா. உயிரில்லாமல் உடல் அணுவளவு அசையும்மா?

ஸ்ரீகி. அதைத் தான் சொல்லவாயெடுத்தேன். இப்பொழுது இந்த உலகம் என்ன உரைக்கிறது தெரியுமோ உமக்கு? பாண்டவர்கள், பாபம் நிரம்பசாதுக்கள், இந்தப்பாபி பச்சைவர்ணன் ஒருவன் நடுவில் இருந்து அவர்களைப் பாழாக்குகிறான், அவர்கள் ஒன்றும் அறியாதவர்கள், இத்தனை கலகமும் இவனால் தான், என்று தூறுகிறதென்னை! இந்தப்பழி எனக்கு வேண்டாம் இனி!

த. ஸ்வாமி! பாமர ஜனங்கள் ஒருகால் அவ்வாறு உம்மைப் பழிப்பார்களே யொழிய, உத்தமர்கள் உம்மீது ஒரு குறையும் கூறமாட்டார்களே! தாங்கள் எங்களுக்குப் போதிப்பது எப்பொழுதும் நற்போதனையல்லவோ?

ஸ்ரீகி. அதன் பிரகாரம் யார் நடக்கிறார்கள் ?

த. அதன் பிரகாரம் யார் நடவாமற் போனது ? ஹே கிருஷ்ண மூர்த்தி ! தங்களுடைய மனதில் ஏதோ இருக்கின்றது அதை இன்னதென்று தயவு செய்து சொல்லுங்கள்.

ஸ்ரீகி. வேறொன்றுமில்லை. நான் எதற்காக இந்த கஷ்டமெல்லாம் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று யோசிக்கிறேன். நாம் மேற் கொண்ட வேலை எப்பொழுது முடியுமோ, ஏதாவது இடையில் நைந்து ஓடியுமோ, என்று இரவும் பகலும் வயிற்றில் வாளைக்கட்டிக்கொண்டு, ஆகாரம் நித்திரையில்லாமல் அவதிப்பட்டு, ஜீவர் பிழைத்தாற்போதும், அவர்கள் சபதம் நிறைவேறினாற் போதும், அணங்குவிரித்த கூந்தல் முடித்தாற்போதும், என்று ஒரு கணம் ஓய்வின்றி நான் கவலைப்பட்டுக்கொண்டிருந்தால், உங்களுக்குள்ளேயே பகைவருடன் உறவாடுபவர்களிருந்தால், நான் எடுத்துக்கொள்ளும் கஷ்டமெல்லாம் எதற்காகவது ? இப்பொழுதே இப்படி இருப்பவர்கள், நாளை யுத்தம் ஆரம்பித்த பிறகு, கொண்டவனும் கொடுத்தவனும் ஒன்று, என்பதுபோல, தாயாதிகளெல்லாம் நீங்கள் ஒன்று சேர்ந்து விட்டு, இந்தக்கிருஷ்ணன் தான் இது வரையில் நம்மை யெல்லாம் ஒருங்குசேர ஒட்டாமற் செய்தான், கழுவுக்கேற்ற கோமுட்டி இவனைப் பிடி, என்றால் நான் என்ன செய்வது? இந்தக் கஷ்டமெல்லாம் எனக்கென்னத்திற்கு ? உங்களுடன் குருக்ஷேத்திரம் போவானேன், அப்புறம் கஷ்டப்படுவானேன் ? பள்ளிக்கூடத்திற்குப் போனால் உபாத்தியாயர் அடிப்பார், போகா விட்டால் யார் அடிப்பார்? என்பது போல, நான் யுத்தத்திற்கு வரவில்லையப்பா. நீங்கள் போய் வாருங்கள்—நான் வருகிறேன். [எழுந்திருக்கிறார்.]

த. ஸ்வாமி ! தேவரீர் எங்களைத்தனியே விட்டுப் போகிறேன் என்று சொல்லவும் உமது மனம் துணிந்ததல்லவா ?

இது நான் செய்த தீவினையின் பயனாகும். உம்முடைய மனம் போனபடி யெல்லாம் சொல்லும். நாங்கள் என்னவோ உம்மைவிடப் போகிறதில்லை, பெருமாளில்லாமல் திருநாள் நடவாதென்பது போல் உம்மைவிட்டு ஒருகாரியமும் நாங்கள் செய்யப் போகிறதில்லை. உங்களுக்கு இப்படிப் பட்ட மனஸ்தாபம் வந்ததற்குக் காரணத்தைக் கூறவேண்டுகிறேன். என்ன நாங்கள் உள்ளுக்குள்ளே எங்கள் பகைவருடன் உறவாடுகிறது? வாஸ்தவமாய் நான் ஒன்றும் அறிகிலேன். அதை மாத்திரம் உடனே எங்களுக்கு அறிவிக்க வேண்டும். ஸ்வாமி! தேவரீர் பாதமே எங்களுக்கு எச்சமயத்திலும் கதி யென்று பற்றினோம்! உமக்கு விருப்பமிருந்தால் எங்களை உதைத்துத்தள்ளி விட்டுப்போம்!

[காலைப்பற்றப் பார்க்கிறார்.]

ஸ்ரீகி. ஹா! ஹா! வேண்டாம்! வேண்டாம்! தருமராஜனே தாம் எனக்கு மூத்தவர்! இங்ஙனம் செய்யலாகாது. எழுந்திரும், உட்காரும்! [கைலாகு கொடுத்து எழுப்பி ஆசனத்தில் அமரச்செய்கிறார்] இது நியாயமல்ல.

த. ஹே கிருஷ்ண மூர்த்தி! தாம் செய்வது மாத்திரம் நியாயமாகுமா? இழியோர்களாகிய நாங்கள் ஏதாவது தவறிழைத்தால் அதைச் சீர்திருத்தி வைக்க வேண்டியகடமை உம்முடையதாயிருக்க, நடு ஆற்றில் விட்டது போல் எங்களை விட்டுப்பிரிவதாக இச்சமயம் தாங்கள் சொல்லலாமா! இப்பொழுதாவது சமாசாரம் இன்னதென்று சொல்லும்.

ஸ்ரீகி. நான் என்னென்று சொல்வது? அம்மையார் மெழுகி மொக்கிட்ட இடத்தில் அறியாதவள் முன் தானையால் அழித்தாள் என்பது போல, பெரியோர்கள் கஷ்டப் பட்டுச் செய்யும் பெருங்காரியங்களை யெல்லாம் சிறியவர்கள் சிதைத்து விடுகிறார்கள். அதையின்னதென்று கூறுவேனாகில் என் பேரில் குற்றந் தான் மிகுதியாகும்!

த. ஐயோ! இன்னும் எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! ஹரிவாசுதேவரே! அப்படிப்பட்ட காரியம் என்ன இரகசியமாய் நடந்திருக்கிறது சற்றே தெரிவியும், தவறிழைத்தவர்கள் என் தம்பிமார்களா யிருந்த போதிலும் தண்டிக்கிறேன். சங்கோசமின்றிக் கூறும், வெளிப்படையாய்.

ஸ்ரீகி. கேளும் தர்மராஜனே, துர்யோதனுதியரெல்லாம் அடியுடன் அழிய வேண்டி முகூர்த்தம் வைத்து நாம் ஆயுத பூசை முடித்து குருக்ஷேத்திரம் புக நாம் எண்ணியிருக்க, துர்யோதனன் இவ்விடம் வந்து தான் வெற்றி பெறும் படியாகவும் உனது தலை அற்று விழும்படியாகவும், நாள் வைத்துக்கொண்டு போயிருக்கின்றான் நம்மவர் ஒருவரிடமிருந்து ?

த. வாஸ்தவமாகவா? இது தங்களுக்கு எப்படித்தெரிந்தது?

ஸ்ரீகி. அவனே என்னிடம் சொல்லி விட்டுப்போனான், நேற்றிரவு என்னிடம் வந்து, கிருஷ்ணா, உன்னால் இனி என்ன முடியும், நான் வெற்றி பெறும்படியாகவும், தர்மன் தலை அற்றுவிழும்படியாகவும் எனக்கு சகல சாஸ்திரவல்லவனாகிய சகதேவனே நாள் குறித்திருக்கிறான்—

சகதேவனும் அரவானும் தவிரமற்றவர்களெல்லாம். சகதேவனா!

ஸ்ரீகி. ஆம், உங்களுக்கு சந்தேகமென்னத்திற்கு? இதோ இருக்கிறாரே தம்பி, அவரை நேராகக் கேட்டுப்பாருங்கள் வேண்டுமென்றால்.

பீ. அடே! சகதேவா! வாஸ்தவம் தானா இது ?

ச. ஆம் அண்ணா, வாஸ்தவம் தான்.

பீ. அடே! பிராத்துருத்துரோகி! அப்படியா செய்தாய்! நமது அண்ணனுக்கே துரோகி ஆனாயா நீ! அடேபாவி! கௌரவர்களை முடிப்பதன்முன் இந்தக்கதையால் உன்னை முன்பு முடிக்கிறேன் இதோ!

[கதையை ஓங்குகிறான்.]

த. பீமா! பொறுசற்று! என்ன நேரிட்டாலும் ஆத்திரத்திற்கு இடங்கொடுக்கலாகாது. பொறு, உண்மையை விசாரிப்போம்—தம்பி சகதேவா! இப்படிவா என்னருகில், நீ எனக்கு துரோகம் செய்வாய் என்று நான் நம்ப மாட்டேன். என்ன நடந்தது சொல் அப்பா!

ச. அண்ணு, நடந்ததைச் சொல்கிறேன் கேளும். நமது குலத்திலுதித்தோனுகிய துர்யோதன ராஜன் எந்திர வெகின மூர்ந்து நேற்றிராத்திரி என் விடுதிக்கு திடீரென்று வந்தார். நமது பகைவனுயினும், நமக்குமுன் பிறந்த மூத்தோனுயிற்றே என்று, நான் மரியாதையுடன் வரவழைத்து, ஆசனமளித்து வந்த காரியம் என்னவென்று வினவ, நீசகல சாஸ்திரவல்லவனெனக் கேள்விப்படுகிறேன், அந்த சாஸ்திர விஷயமாக ஒரு கேள்வி கேட்க வந்தேன் என்ருர். இன்னது கேட்கப் போகிருர் என்று அறியாது, நான் அறிந்ததை உமக்கறி விக்கத் தடையில்லை என்று உரைத்தேன். அதன் பேரில் நாங்கள் நாளை நடக்கப்போகிற பாரதயுத்தத்தில் வெற்றி பெற ஆயுதம் எடுக்கச்சரியான லக்னம் வைத்துக்கொடுக்கவேண்டும், அது எப்படி இருக்கவேண்டுமென்ருல், தர்மராஜன் தலையற்று தரைமீது உருளும்படியான தாயிருக்கவேண்டும் என்று சொன்னுர். சாஸ்திரத்தில் ஒருவன் அறிந்ததைக் கேட்பவர்களுக்கு உண்மையாய் உரைத்திடவேண்டும் என்னும் நியாயப்படியும், நான் அவருக்கு அறியாமல் அளித்தவாக்கைக் காப்பாற்றும் பொருட்டும், வரப்போகிற அமாவாசை இரவு ஆயுதமெடுப்பீராயின் அப்படியே ஆகும் என விடைகொடுத்தேன், இதுவே நடந்தது.

த. [அவனைக்கட்டி அணைத்து] தம்பி! தம்பி! சகதேவா! இதுவரையில் நீ எனக்கு தம்பி அல்ல, இன்று முதல் தான் எனக்குச் சரியான தம்பி! சத்தியநெறி தவருத நித்தியனே! உன்னை ஒப்பார் ஆர் இவ்வாருலகில்! சத்ருவென்

றும் பாராமல் சத்தியம் உரைத்தனை! அந்தசத்தியமே உன்னைக்காக்குமாக! ஹே கிருஷ்ண மூர்த்தி! ஹே சபையோரே! நாளை யுத்தத்தில் நான் வென்றாலும் சரி, தோற்றாலும் சரி! இந்த ராஜ்யம் எனக்கு வந்தாலும் சரி, போனாலும் சரி! நாங்கள் செய்த சபதம் நிறைவேறினாலும் சரி, நிறைவேறா விட்டாலும் சரி! இவையனைத்தும் எனக்குப் பெரிதல்ல, சாஸ்திரப்படி சத்திய நெறிதவறாத சகதேவனைத் தம்பியாகப் பெற்றதருமன் என்கிற அந்த ஒரு பெயர் போதும் எனக்கு!—காயாம் பூவண்ணனே! எம் கண்ணனே! கிருஷ்ணா!—உலகுள்ளளவும் அழியாப் புகழ் அவனுக்கு என்றும் நிலைத்திருக்கும்படி உமது திருவாயால் ஆசிர்வாதம் செய்யும்!

[கிருஷ்ணனருகில் சகதேவனை அழைத்துச் செல்கிறார்.]

ஸ்ரீகி: சபாஷ்! சபாஷ்! சரிதான்!—கேட்டீர்களா சபையோர்களே! இவர் பெரியவராயிற்றே, இதற்கு ஏதாவது பரிஹாரம் செய்வாரென்று இதை இவருக்குத் தெரிவித்தால், ஏனடா இப்படிச் செய்தாய் புத்தியில்லாதவனே, என்று அவனைத் தண்டிப்பதைவிட்டு, அவனைக்கட்டியணைத்து உச்சிமுகர்ந்து முத்தமிட்டுப் புகழ்கிறார்! இந்த அநியாயத்தை நான் ஆருடன் சொல்லி ஆறுவது? தன் தலை தரைமீதுருள லக்னம் வைத்துக்கொடுத்த தம்பியை மெத்தவும் புகழ்கிறார் தர்மராஜன்! எல்லாம் உள்ளுக்குள் ஏதோ உளவாயிருக்கிறது. கடைசியில் நான் ஒருவன் தான் பழிக்காளாவேன் போலும். விதை விளையவேணும் என்று நான் பட்டபாடெல்லாம் விழலுக்கிறைத்த நீராச்சு! விருதாவாக எனக்கு பேச்சாச்சு! விவகாரம் கெட்டுப் போச்சு!—தர்மராஜனே! அதிகாரி வீட்டில் திருடித்தலையாரி வீட்டில் ஒளித்து வைத்தது போல், இதை உம்மிடம் சொல்லிக்கொண்டேனே! அக்கரைக்காரருக்கில்லாத காரியம் அயலாருக்கு என்ன வந்தது வீர்யம்! இனி நீர் உமது இஷ்டப்படி நடத்திக் கொள்ளும், என்னை ஒன்றும் கேளாதீர். கேட்டாயடா அப்பா, பீமா, நடந்த சமாசாரத்தையெல்லாம்?

பீ. கேட்டேன் கிருஷ்ணமூர்த்தி! எங்கள் அண்ணாவுக்கு இந்த சாஸ்திரங்களெல்லாம் படித்துப்படித்து தான் புத்திகெட்டுப்போயிருக்கிறது !-அடே அர்ஜுனா ! இவர்களையெல்லாம் இனிநம்புவதிற் பிரயோஜனமில்லை, எடு உன் காண்டீபத்தை! எடுத்துக் கொண்டேன் நான் என் கதையை! நாமிருவரும் இட்சணம் புறப்பட்டுப் போய் நமது ஆயுதங்களைக் கையில் பிடித்துக் கௌரவர்களைப் பஞ்சு பஞ்சாகப் பறக்கடித்து நாம் செய்த சபதத்தையும் முடித்து பாஞ்சாலியின் கூந்தலையும் முடித்து வருவோமாக! பதினெட்டு நாள் நமக்கென்னத்திற்கு, பாதி நாள் போதும் நமக்கு! புறப்படு உடனே! என்ன யோசிக்கிறாய் நீயும்?—நீ வராவிட்டால் நான் மாத்திரம் போகிறேன் இதோ! [புறப்படுகிறான்.]

அர். [பீமனைத் தடுத்து] அண்ணா பீமா, கொஞ்சம் பொறு. எதற்கும் கிருஷ்ணமூர்த்தியை ஒரு வார்த்தை கேட்டுவிட்டு எதுவும் செய்வோம்—கிருஷ்ணமூர்த்தி, இதற்கேதாவது பரிஹாரம் தாம் சொல்லுகிறீரோ அல்லது பீமசேனனுடன் புறப்படுவதற்கு எனக்கு உத்தரவு கொடுக்கிறீரா ?

ஸ்ரீகி. அர்ஜுனா! நீ கேட்பது ஒரு விந்தையாயிருக்கிறது! செய்வதற்கு நீங்கள், பரிஹாரத்திற்கு நானோ? சகல சாஸ்திர சம்பன்னனான சகதேவனையே கேட்டுப்பாரேன்.

ச. ஹே கிருஷ்ணமூர்த்தி! இதுவும் உமது திருவிளையாடலோ? மாயனே! உம்முடைய மாயையெல்லாம் நான் நன்றாய் அறிவேன் என்று மதியும். பிள்ளையையும் கிள்ளிவிட்டுத்தொட்டிலையும் ஆட்டுகிறதுபோல் நீர் எல்லாவற்றையும் செய்யும்!—உம்—இதற்குப் பரிஹாரம் சொல்லவா, பாரத யுத்தமே நடவா வண்ணம் மார்க்கம் சொல்லுகிறேன்—கேட்கிறீரா ?

ஸ்ரீகி. அடடா! ஏதோ சொல் கேட்போம்.

ச. முதலில் எங்கள் ஐவருக்கும் மூ—

ஸ்ரீகி. சகதேவா! பொறு! பொறு! இப்படிவா இதை ரகசியமாக என்னிடம் சொல். எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ என்பதுபோல துர்யோதனன் சாரணர் எங்கு ஒளித்திருக்கிருர்களோ யாருக்குத் தெரியும்? என் காதோடு சொல். [ரகசியமாய் அவனுடன் பேசுகிருர்.]

பீ. அண்ணு! இதெல்லாம் என்ன? சிறுவன் ஏதோ உளறி விட்டான் என்று நீரும் அஞ்சுகிறீர். கிருஷ்ணமூர்த்தியும் பயப்படுகிருர்! பீமன் கையில் பெருங்கதை ஒன்றிருக்கும் வரையிலும், அர்ஜுனன் கையில் அந்தக் காண்டீபம் இருக்கும் வரையில், உம்முடைய உடலில் ஒரு ரோமம் கீழே விழும்படிச் செய்ய துர்ஜனர்களாகிய துர்யோதனுதியரால் முடியுமோ?

ஸ்ரீகி. [சகதேவனுடன் சபை நடுவில் வந்து] சபாஷ்! சபாஷ்! என்னவோ என்று எண்ணினேன். உலகில் உன்னைவிட புத்திசாலி கிடையாதென்று நாங்களெல்லோரும் ஒப்புக் கொள்ள வேண்டியதே!-கேட்டீரா, தர்மராஜனே, சபையோர்களே! நம்முடைய சகதேவன் மகத்தான யுக்தி செய்திருக்கிருன்; சாஸ்திர தர்மத்தையும் காப்பாற்றி, பகைவருக்கும் சாஸ்திரப்படி நாள் பார்த்து, நமக்கே ஜெயமுண்டாகும் படியாகவும் ஏற்பாடு செய்திருக்கிருன்! இதன் விவரத்தைப் பிறகு சொல்லுகிறேன். இப்பொழுது சூட்சுமமாய் அறியுங்கள். துர்யோதனன் நாளைக்குத் தான் அமாவாசை யென்று ஆயுதமெடுக்க நிச்சயித்திருக்கிருன்; காலகதியில் கிரஹங்களின் மாறுபாட்டால் இன்றைக்கே அமாவாசை கொஞ்சம் ஆரம்பம் உண்டு, ஆகவே இன்றைத்தினமே நாம் பிதுர்க் கடனை முடித்து, அமாவாசைக்குரிய காரியங்களைச் செய்து—தக்கபடி களபலி கொடுத்து—ஆயுத மெடுப்போமாயின் நமக்கே ஜெயமுண்டாகும் என்பதற்குச் சந்தேகமில்லை.

த. ஐவரைக்காக்க அவதரித்த அருந்தெய்வமே! மிகச் சந்தோஷம்; அப்படியே செய்வோம். ஆயினும் ஏதோ தக்க

படி களபலி கொடுக்கவேண்டு மென்றீரே, அதென்ன சற்று விவரமாகச் சொல்லும், அதன்படியே செய்வோம்.

ஸ்ரீகி. ஆமாம் அதை மறந்தேன். அது ஒரு கஷ்டம் இருக்கிறது.

த. கஷ்டமென்ன? எத்தனை ஆயிரம் எருமை, ஆடு, கோழி முதலியன வேண்டும், சொல்லும், அதை அரைநாழிகையில் வரவழைத்து விடுகிறேன்.

ஸ்ரீகி. அம்மாதிரியான சாதாரண பலி யெல்லாம் நமக்கு இப்பொழுது பிரயோஜனப்படாது. நாம் எடுத்துக் கொண்ட வேலையோ மலை பாண்டமாகிற வேலை; அன்றியும் துர்யோதனன் திவ்யமான பலி கொடுத்து பராசக்தியைப் பூஜித்து ஆயுதமெடுக்கத் தீர்மானித்திருப்பதாகக் கேள்விப்பட்டேன்; ஆகவே, அவனுக்கு அபஜெயமும் நமக்கு ஜெயமும் தரும்படியாக வீரமாகாளிக்கு உத்தமமான பலியைக் கொடுத்து ஆயுத மெடுக்க வேண்டும் என்று தோற்றுகிறது. அதற்கு உமது எண்ணம் எப்படியோ?

த. ஸ்வாமி! தாம் என்னைக் கேட்பது நரிவாலைக் கொண்டு கடலாழம் பார்ப்பதுபோ லிருக்கிறது. எல்லாம் அறிந்த தமக்கு நான் என்ன சொல்லப் போகிறேன்; அடிக்கடி என்னை இவ்வாறு பரிசோதியாதிர்—நாம் இன்னது பலி கொடுக்க வேண்டுமென்று சொல்லும் அப்படியே செய்கிறோம்.

ஸ்ரீகி. நான் அறிந்த வரையில், தேகத்தில் முப்பத்திரண்டு லட்சணங்கள் முற்றிலு முடையவனாய், சத்திய சவுச ஆசார விவஹார முள்ளவனாய், வீரப்பிரதாப அதிரத்தலைவனாய், எதிர்ரோமக் காரனாய், இருக்கும் படியான சுத்த வீரனை, வீரமாகாளிக்கு நரபலியாகக் கொடுத்தால், எத்தனை பெயர் எத்தனை சாஸ்திரம் பார்த்து நாள் வைத்துக் கொடுத்தபோதிலும், எவ்வளவு வேறு பலியிட்டுப் பூசை செய்து ஆயுதமெடுத்தாலும், அந்த துர்யோதனனாதியருக்கு ஜெயம் கிடைக்காது, நமக்கே கிடைக்குமென்று

நம்புகிறேன்—என்ன நகைக்கின்றாய் அப்பா குழந்தாய், அரவானே ?

அ. ஒன்றுமில்லை! உமது வேலையைப் பாரும் தயவு செய்து.

த. ஸ்வாமி, நீர் சொல்வது ஆகும் காரியமாகத் தோன்ற வில்லையே! நீர் கூறும்படியான சர்வ லட்சணமும் கூடிய வர் ஆர் இருக்கிறார்கள்? அப்படி யாராவது இருந்தபோதிலும் நமக்கு களபலியாக ஒப்புக்கொள்ளுவார்களா? இதற்குத் தாம் தான் ஒரு யோசனை சொல்லவேண்டும்.

ஸ்ரீகி. எனக்கு ஒன்றும் தோற்றவில்லை. இது நீர் சொல்லுகிற படி சற்றேறக்குறைய அசாத்தியமான காரியம்தான். கடையில் விற்கிற பண்டமா, காசு கொடுத்துக் கொள் வோம் என்பதற்கு? நான் கூறிய லட்சணங்களும் குணங் களும் கூடியவர்கள் இவ்வுலகில் நாலைந்து பெயர்தான் இருக்கிறார்கள்.

த. அவர்கள் யாவர்?

ஸ்ரீகி. சல்லியனொருவன் இருக்கிறான், அவனோ துர்யோதனன் சூதால் அவன் பக்கம் படைத்துணையாய்ப் போய் விட் டான்.

த. பிறகு?

ஸ்ரீகி. பிறகு,—அர்ஜுனன் இருக்கிறான். அவனைக் களபலி இடுவதென்றால் பஞ்சபூதம் போன்ற ஐவர் என்னும் பூண்டு அடியோடு அற்றுப்போம் அட்சணமே. அன்றி யும் எவனைக் கொண்டு பாரத யுத்தத்தில் நாம் ஜெயிப் போம் என்று திடமனதுடையவராய் இருக்கிறோமோ, அவனையே பலி கொடுத்து, பிறகு வெல்வதெப்படி?

த. ஸ்வாமி! எங்களில் ஒருவர் இறந்தால் மற்று நால்வரும் உயிர் தரியோம் என்னும் எங்கள் சபதத்தை மறவாதீர்.

ஸ்ரீகி. ஆம் ஆம். அதற்குச் சந்தேகமென்ன? ஆகவே அது உத வாது. இன்னொருவன் இருக்கிறான், அவன் நமக்குப் பிர யோஜனப் படப்போகிறதில்லை. தர்மநந்தனா—மிகுதியாக

நானொருவன் இருக்கிறேன். செல்லும் செல்லாததற்கு செட்டியார் என்பது போல, என்னைக்களபலி கொடுத்து, உங்கள்சபதங்களையும் சத்துருக்களையும் முடித்து, ஜெய லட்சுமியையும் ராஜ்ய லட்சுமியையும் பெற்று, சுகமாய் அரசாளுங்கள். இது தான் யோசனை !

ஸ. சிவ! சிவ! [காதைப் பொத்தி] ஹா! கிருஷ்ணா! உம்மையே நம்பி யிருக்கும் என்னை நீர் இவ்வாறு வருத்தல் நியாயமா? கோடி ராஜ்யங்கள் வருவதாயினும் கோபாலா! உம்மை நாங்கள் பலி கொடுப்போமா? அரசர்களே! கேட்டீர்களா கிருஷ்ணமூர்த்தி கூறியதை! எங்குல தெய்வமாகிய கண்ணனைப் பலி கொடுத்து இப்பாரையாளுவதைவிட எங்கள் தாயாதிகளாகிய துர்யோதனனே தரணியாளட்டும், நாங்கள் மறுபடியும் காட்டுக்கே போகிறோம் நீங்கள் எல்லோரும் உங்கள் வீட்டிற்குப் போய்ச் சேருங்கள். உங்களுக்கு இவ்வளவு சிரமம் விருதாவில் கொடுத்ததற்காக மன்னியுங்கள்—தம்பிமார்களே எழுந்திருங்கள்—[எழுந்திருக்கிறார்] ஹா கிருஷ்ணா! எங்களுக்கெல்லாம் உத்தரவு—

[கைகூப்பிப் பிரார்த்திக்கிறார்.]

அர். அண்ணா, என்ன தாமும் சற்று ஆத்திரப்படுகிறீரே! கொஞ்சம் பொறும்—கிருஷ்ணமூர்த்தி, இன்னும் யாரோ ஒருவன் இருப்பதாகவும் ஆனால், அவன் நமக்குதவமாட்டான் என்றீரே, அதென்ன விவரம், சற்று தயைசெய்து சொல்லவேண்டும். அது யார் அது?

ஸ்ரீகி. அரவான் ஒருவன் இருக்கிறான்—அவன்—

அர். ஏன் உதவ மாட்டான், அதையும் சொல்லி விடுமே! இவ்வளவு தூரம் சொன்னவர் அதில் என்ன கொஞ்சம் மறைவு?

ஸ்ரீகி. நீயே சொல்லிவிடப்பா, நான் கேள்விப்பட்டது வாஸ்தவமாயிருக்குமோ என்னவோ? எதற்கும் நீயே சொல்லிவிடு.

அ. பெரிய அப்பா, உட்காருங்கள். உங்களுக்கு ஒரு கவலையும் வேண்டாம். உங்கள் கவலையை அகற்ற நானிருக்கிறேன். இதை முன்பே சொல்லி யிருப்பேன். ஆயினும் மாமாவின் திருவிளையாடலை இன்னும் கொஞ்சம் கண்டு மகிழவேண்டுமென்று சும்மா இருந்தேன். உலகங்கள் அனைத்தையும் படைத்துக் காத்து அழித்தருளும் அண்ணலே! உம்மைப் புகழுமுன் உமக்குக் கபடநாடக சூத்திரதாரி என்று பெயர் வைத்தானே அவனைப் புகழ வேண்டும்! காஞ்சிபுரத்தில் திருடுவதற்கு காவிரிப்பூம்பட்டினத்தில் கவிழ்ந்து படுத்து மார்பால் நகர்ந்துவந்த கதை போல, கண்ணுக்கெட்டாத தூரத்திலிருந்து கடிவலை வீசும் மாயவா! உமது மனதிலெண்ணி யிருப்பதை முடிக்குங் காலம் சமீபத்திலிருக்கிறபடியால், இந்த தந்திரம் ஒன்று மாத்திரமா செய்வீர்—இன்னும் என்னென்னவோ செய்யக்காத்திருக்கிறீர் அறிவேன் நான்—இறைவனே! யுத்தம் செய்யாதபடி என்னை முடிக்க இவ்வளவு யுக்தி செய்யவேண்டுமா தாம்? உமது மனத்தில் நினைத்த மாத்திரத்தில் நான்மடிய மாட்டேனு?—தந்தையரே, கேளும் நடந்த விர்த்தாந்தத்தை—நேற்றிரவு அகஸ்மாத்தாய் துர்யோதன ராஜன் என் விடுதிக்குவர, ஜன்மத்து வேஷியாயிருந்தும் பெரிய தந்தை முறையாயிற்றே என்று நம்முடைய குலதர்மத்தை மறவாமல்—அவரை எதிர்கொண்டழைத்து ஆசனத்திலிருத்தி, வந்த காரணம் என்னென்று வினவ, எனக்கு நீ ஒரு உதவி செய்ய வேண்டுமென்று வேண்டினர். அவரது குணத்தை அறிந்தவனய், யுத்தத்தில் உமக்கு உதவுவது தவிரவேறு எதையும் கேளும், என்று வாக்குக் கொடுத்தேன். அப்படியே ஆகட்டும் என்று ஒப்புக்கொண்டு, யுத்தத்திற்கு முன்னல் நாங்கள் செய்யவேண்டிய களபலிக்கு நீ உதவவேண்டுமென்று கேட்டார்; வணங்காமுடி மன்னன் தன் தலை வணங்கி என்னை இது கேட்ட பொழுது, என்வாக்கால் கட்டுண்டவனய், நமது குலதர்மத்தைப் பழியாதிருக்

கும் பொருட்டு ஒப்புக்கொண்டேன். ஆயினும் கண்ணன் அருளால் ஒன்று கூறினேன். இத்தேகம் நீரிற்குமிழி யாக்கையென நித்திய மில்லாததால், நீர் களபலி கொடுக்கும் பொழுது இத்தேகம் எனக்கிருக்குமாயின் எடுத்துக் கொள்ளும் என்றேன். ஆகவே இப்பொழுது ஒன்றும் கெட்டுப் போகவில்லை. அவர் நாளைக்குத்தானே களபலி கொடுக்கப் போகிறார், மாமா வின் எண்ணப்படி நீங்கள் முந்திக் கொள்வதானால் உங்களுக்குச் சொந்தமாயிருக்கிறது இந்த உடல், எடுத்துக் கொள்ளுங்கள்!

த. அப்பா! கண்மணி அரவானே! அருகில்வா! [அவனைக் கட்டியணைத்து உச்சிமுகர்ந்து] எங்கள் குலத்தை ஈடேற்ற வந்த அருஞ்செல்வமே! நீ செய்தபுண்ணியமே புண்ணியம்! நீ பெற்றபுகழே புகழ்! வேறுயார் பெறுவார் இப் புவியில்! சூர்ய குலத்துதித்த சிபிசக்கரவர்த்தி தன்னைச் சரணம் என்றடைந்த புரவிற்கே தன் உடலைக் கொடுத்தார், நீயோ ஜென்மத்துவேஷி என அறிந்தும், தேகி என்று கேட்டானே யென்று உன் தேகத்தைக் கொடுத்தாய்! சந்திரகுலத்தை விளக்கவந்த சத்தியம் தவறாத் தீபமே! உன் கீர்த்தியானது உலகுள்ளளவும் நிலைத்திருக்குமாக! நான் ஜெயித்தால் எவ்வளவு சந்தோஷமடைவேனோ அதைப் பார்க்கிலும் பதின்மடங்கு சந்தோஷம் இன்று பெற்றேன்! கிருஷ்ண மூர்த்தி! என்ன சொல்லுகிறீர்?

ஸ்ரீகி. நான் சொல்வது இனி என்ன இருக்கிறது? அரவான் தான் எல்லாவற்றையும் சொல்லி விட்டானே! தர்மசங்கடத்தினின்றும் தப்பும் வழியையும் காட்டிவிட்டான். இருந்த போதிலும் அர்ஜுனனுடைய அபிப்பிராயத்தை நாம் அறியவேண்டியது அவசியமல்லவா?

அர். கிருஷ்ணமூர்த்தி! என் அபிப்பிராயம் என்பதென்ன, எல்லாம் தமது சித்தம் போல் நடக்கட்டும்.

ஸ்ரீகி. அர்ஜுனா, இப்படிவா—[அவனிடம் ஒரு புறமாக] அப்பா! இவ்விஷயத்தில் உன் ஊனக்கண் கொண்டு காணாதே! ஞானக்கண் கொண்டு பார்! எது நேர்ந்த போதிலும் நமது க்ஷத்திரிய தர்மப்படி நடக்கவேண்டியது தானே முக்கியம். இவ்விஷயத்தைப் பற்றி இன்னும் விரிவாக உனக்குப் பிறகு சொல்லுகிறேன்.

[அவனைத் தடவிக்கொடுக்கிறார்.]

அர். கிருஷ்ணமூர்த்தி, உம்முடைய சித்தம்.

த. அந்தோ! அரவான் அளித்த அருந்தானத்தின் அருமையைக் கெட்டு அகமகிழ்ந்த நான், அவனை நாம் இழக்கவேண்டுமே என்னும் அவதியை மறந்தேன்! யுத்தம் ஆரம்பிக்கு முன்னே புத்திரசோகத்துடனா ஆரம்பஞ் செய்வது?

அ. தந்தையரே! இதென்ன இது! தாம் அறியாததா? இக் காற்றடைத்த சோற்றுத்துருத்தியை, நீரிற்றோன்றும் புத்புதத்தை, பொய்யாகிய இம்மெய்யை, அநித்தியமாகிய இவ்வுடலைச் சதமென்று எண்ணி நீர் துயர் அடையலாமா? உங்களுக்கு நான் பிள்ளையாகப் பிறந்து உங்களுக்குப் பிற்காலம் பிதிர்கடன் செலுத்துவதைவிட, உமக்கு முன்னேயே உமக்கு வெற்றியுண்டாக என் உடலை பலி கொடுத்து, நான் பிள்ளையாகப்பிறந்ததற்காக என் கடனைத் தீர்த்தல், ஆயிரமடங்கு அதிக மேன்மையானதன்றோ!

ஸ்ரீகி. சபாஷ்! குழந்தாய்!

அனைவரும். சபாஷ்! சபாஷ்!

[தர்மராஜன், அர்ஜுனன், நகுலசகதேவர்கள் அரவானைக் கட்டித்தழுவுகின்றனர்; கடைசியில் பீமன் அவ்வண்ணம் செய்கிறான்.]

அ. மூத்த அப்பா, மெல்ல! மெல்ல!

பீ. இல்லையடா! கண்மணி! எனக்கிருக்கும் சந்தோஷம் பொறுக்க முடியவில்லை!

அ. மாமா, இனி தாமதம் செய்யவேண்டாம், உடனே களபலி இன்றே கொடுக்கச் செய்யவேண்டிய ஏற்பாடு களை யெல்லாம் செய்துவிடும்.

ஸ்ரீகி. சகதேவா, அப்படியே செய்துவிடப்பா.

ச. அப்படியே.

அ ஆயினும் கிருஷ்ணபகவானே, தாம் எனக்கு ஒருவரம் கொடுத்தருளவேண்டும்.

ஸ்ரீகி. அப்பா! நீ கேட்பதைக் கொடுக்காமலிருப்பேனே? தாரா ளமாய்கேள்.

அ. அவனி முழுதும் ஒப்புயர்வில்லா அதிரத வீரனுகிய அர்ஜுனன் குமாரனுகிய அரவான், களபலியிலிறந்தான் என்னும் பெயர் எனக்குவரக்கூடாது. இது என் தந் தைக்கு ஓர் இழிவாகும். அக்குறைவில்லாதபடி தாம் தான் ஒருயுக்தி சொல்லவேண்டும்.

ஸ்ரீகி. குழந்தாய்! அப்படியே ஆகட்டும். இதற்குச் சந்தேக மென்ன, களபலிகொடுப்பதென்றால் தலையை வெட்டிக் கொடுப்பதென்று எண்ணினுய்? அவ்வாறு அன்று.

அ. அதன் முறை எப்படியோ அதைத் தெரிவிக்கவேண்டும்.

ஸ்ரீகி. நீ ஸ்நானம் செய்து, திரிகரண சுத்தியுடையவனுய், கையில் வாளேந்தி, பராசத்தியின் எதிர் நின்று, ஏகாக்ர சித்தனுய், நமது பக்கம் ஜெயம் உண்டாக வேண்டு மென்று, உனது முப்பத்திரண்டு உறுப்புகளிலே இருந்து கொஞ்சம் கொஞ்சம் நீயாக அறுத்து, நைவேத் தியம் செய்யவேண்டும். அதனுல் நீ உடனே மரிப்பாய் என்று மனத்துயர் அடையவேண்டாம். அப்பா, நாளே நடக்கப் போகிறபாரத யுத்தத்தில் ஐந்து நாட்கள் நீயும் யுத்தம் செய்யும் சக்தி உனக்கு பரமேஸ்வரன் அருள் வார் என்று நினைக்கிறேன், அஞ்சாதே!

அ. அவ்வளவு போதும் அநுக்கிரகம்.

த. ஸ்வாமி, மிகவும் சந்தோஷம், ஆயினும் ஒரு சந்தேகம், எதிர் ரோமக்காரனாயிருக்க வேண்டுமென்று முன்பு கூறினீரே அது ஏன்?

ஸ்ரீகி. அப்பா தருமநந்தனா, முப்பத்திரண்டு, அவயவங்களிலுமிருந்து மாமிசத்தை அறுத்து வைக்கும்பொழுது, உதிரம்வராமலிருக்க வேண்டும், கண்ணீர் சிந்தாமலிருக்க வேண்டும், முகம் வாடாமலிருக்கவேண்டும், இதற்கெல்லாம் எதிர் ரோமக்காரனாயிருந்தால் தான் முடியும்—சரி நேரமாகிறது, நாம் செய்ய வேண்டிய காரியங்கள் அநேகமிருக்கின்றன, காலமோ குறைவாயிருக்கிறது. நாம் இனி தாமதிக்கலாகாது, புறப்படுவோம்.

[எழுந்திருக்கிறார், மற்றோர்களும் எழுந்திருக்கின்றனர்]

அ. [போகும் பொழுது] மாமா, உமது மனம் திர்ப்த்தியடைந்ததா? இன்றிரவு சுகமாய் நித்திரை செய்வீரா?

ஸ்ரீகி. எங்கே அப்பா, நான்சுகமாய் நித்திரை செய்ய இன்னும் ஒரு யுகம் பிடிக்கும்போலிருக்கிறது.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



# நான்காம் காட்சி

இடம்:—ஓர் ஏகாந்தமண்டபம்.

ஸ்ரீ கிருஷ்ணனும் சகதேவனும் வருகிறார்கள்.

ஸ்ரீகி. சகதேவா! எல்லாமறிந்த உனக்கு இது தெரியாமற் போயிருக்குமா? தேவரகஸ்யம் மனுஷ்யரகஸ்யம் என்று உண்டென்பதை நீ அறியாயா? அப்படிப்பட்ட விஷயங்களையெல்லாம் அனைவரும் அறிய நாம் பேசலாமா? எந்தப் புற்றில் எந்தப்பாம்பிருக்குமோ என்பது போல் யாருக்கென்ன தெரியும்? நம்முடைய பகைவரின் பட்சத்தார் நம்முடன் உறவாடுவதுபோலிருந்து இங்கு நடக்கும் சமாசாரங்களை யெல்லாம் துர்யோதனதியர்க்குத் தெரிவிக்கக்கூடு மல்லவா?

ச. இந்தப்பீடிகையெல்லாம் ஏதற்காக கிருஷ்ணமூர்த்தி?

ஸ்ரீகி. இக்காரணங்களைப் பற்றி தான் உன்னுடன் தனியாகப் பேச இங்கு உன்னை அழைத்து வந்தேன்—நீ சபையில் கூறியது எனக்கு நன்றாய் விளங்கயில்லை—இந்தபாரத யுத்தம் நடவாதபடிக்கும் யாவரும் பிழைப்பதற்கும் ஏதோ உபாயமிருப்பதாகச் சொன்னையே, அதைச் சற்று விவரமாகச்சொல். சாத்தியமானல் நாமிருவரும் கலந்து யோசித்து அதன்படி செய்வோம்.

ச. கிருஷ்ணமூர்த்தி! இதென்ன நாடகம்? நீர் தான் பாரிலுள்ள சகல தேசத்து ராஜாக்களையும் குருக்ஷேத்திரத்தில் கும்பலாகக்கூட்டி கூடியமட்டும் பரிபூர்ணமாக்க வேண்டும் என்றும், பூமிபாரம் தீர்க்க வேண்டுமென்றும், கங்கணம் கட்டிக்கொண்டு பிறந்திருக்கின்றீரே, இந்தப் பாரதயுத்தம் நடவாதிருக்கும் படியான காரணத்தை நான் சொல்லிவிட்டால் அதன்படி நடவாமலிருக்கும் படிச் செய்து விடுவீரோ?

ஸ்ரீகி. அப்பா சகதேவா, இதென்ன இப்படிகேட்கிறாய் நீ? நம்மாலாவதொன்றில்லை என்பதை நீ நன்கு அறியாயோ? எல்லாம் விதித்தபடி ஆகிறது, அதைத்தடுக்க ஆரால் முடியும்? ஆயினும் உன்னுடைய புத்தியின் சூட்சுமத்தைக்கண்டு மகிழவிரும்புகிறேன் என்று நினைத்துக்கொண்டு சொல்.

ச. அப்படியேனும் சொல்லுகிறேன். இந்த சூட்சுமம் நீர் அறியாததல்ல. ஆயினும் அடியேனுடைய வாக்கினால் வெளிப்படுத்த வேண்டுமென்று விருப்பமிருக்கிறதுபோலும்—ஸ்வாமி! இப்பாரத யுத்தம் எதற்காக? இப்பாரை தர்மராஜன் ஆளுவதோ அல்லது துர்யோதனன் ஆளுவதோ என்று தீர்மானிப்பதற்குத்தானே! இவ்விரண்டு பெயரையும் விட, இதை ஆளுவதற்கு சகல உரிமை பொருந்தியவன், இவர்களுக்கெல்லாம் மூத்தவன், பாண்டுவின் ஜேஷ்டபுத்திரன், குந்திதேவியின் முதல் மகன், கர்ணன்-ஒருவனிருக்கிறான் என்னும் ரகசியத்தை வெளியிடும் சற்றே, பிறகு இந்த பாரத யுத்தம் நடக்கிறதா பார்ப்போம்! இந்த உண்மையைக் கேட்டவுடன் தர்மராஜனைப் போய் தன் மூத்தவன் காலில் பணிந்து நீரே இவ்வுலகனைத்தையும் ஆளும் என்று வேண்டுவார். துர்யோதனனும் நமதாருயிர் நண்பன் தானே இவ்வுலகனைத்தும் ஆளப்போகிறான் என்று சந்தோஷப்பட்டு சண்டையை நிறுத்திவிடுவான்—கர்ணனுக்குப் பட்டாபிஷேகம் செய்து விடும், பிறகு பாரதயுத்தம் நடக்கிறதை நான் காண்கிறேன்!

ஸ்ரீகி. அடடா! இந்தப்பரம ரகசியம் உனக்கு யார் தெரிவித்தது?

ச. நீர் தான்!

ஸ்ரீகி. நானா? இதென்னடா அப்பா, எதற்கும் நம்மையிழுத்துவிடுகிறாய்? நானெங்கு உனக்குத்தெரிவித்தேன்?

ச. இவ்விரேழ்புவனங்களையும் அளித்துக் காத்து அழித்திடும் எம் ஈசனே! உம்மோடு ஏகனாய் நிற்கும் யோகநித்திரையில் உணர்ந்தேன் இவ்வுண்மையை.

ஸ்ரீகி. சந்தோஷம்! சகதேவா, நீ சொல்வதெல்லாம் நியாயம் என்று ஒப்புக்கொள்வோம். இவ்வுண்மையை வெளிப்படுத்தி இந்த யுத்தத்தை நிறுத்தி விடுவோமாயின் பிறகு, அர்ஜுனன் சபதம் எப்படிப்போவது? பீமன் சபதம் எப்படிப் போவது? இன்னும் மற்றவர்கள் நீங்கள் செய்த சபதங்களெல்லாம் எப்படிப்போவது? பாஞ்சாலியின் பரந்த கூந்தல் எப்படி முடிப்பது? நீங்கள் எல்லோரும் சத்தியம் தவறலாமா? இது துவாபரயுகமாச்சுதே! இன்னும் நரமனிதன் செய்த கட்டுரையைக் கடந்து நடக்க கலியுகம் பிறக்கவில்லையே!

ச. அந்த ஒரு காரணம் பற்றித்தான் இதையறிந்தும் நான் இதை வெளியிடா திருக்கிறேன்—இதற்காகத் தானே எங்களை யெல்லாம் இவ்வாறு சபதம் பண்ணும்படி செய்து வைத்தீர் நீர்?

ஸ்ரீகி. அடடா! இது என்ன விந்தையாயிருக்கிறது! அதற்கும் காரணம் நான் தானோ?

ச. சந்தேகமென்ன? உம்மையன்றி ஒரு அணுவும் அசையுமா? நான் முன்பு சொன்ன கஷ்டம்கூட வேண்டியதில்லை. உம்முடைய கைகால்களைக் கட்டி போட்டால் இந்த பாரதயுத்தமும் நடவாது, ஒன்றுமே நடவாது.

ஸ்ரீகி. ஆனால் அப்படியே செய்கிறது தானே! இவ்வளவு கஷ்டமென்னத்திற்கு உங்களுக்கெல்லாம்?

ச. கிருஷ்ண மூர்த்தி! அதைச்செய்ய முடியாதென்றால் என்று நினைக்கவேண்டாம் நீர்.

ஸ்ரீகி. ஏதோ செய்பார்க்கலாம்.

ச. உலகனைத்தையும் ஈன்றோனே! உம்முடைய உண்மையான உருவத்தைக்காட்டும், உம்மை நான் கட்டுகிறேனோ இல்லையோ பாரும்!

ஸ்ரீகி. சகதேவா! உன் இச்சையை மெச்சினேன்!—இதோ கட்டுபார்ப்போம்.

[என்று சொல்லி விஸ்வரூபம் கொள்ளுகிறார்.]

ச [அவர்பாதம் பணிந்து] ஆதிபரம் பொருளே! அச்சுதா! ஆனந்தா! மாதவா! மதுசூதனா! மூவுலகையும் ஈரடியால் அளந்த ஒருவனே! முத்திக்கரசே! மூவர் முதலே! முகுந்தா! பாவியேன் பாபம் போக்கிட பாத தர்சனம் தந்த பரம் பொருளே! தேவதேவனே! தேஜோமயமான உம்முடைய திவ்ய ரூபத்தைக்கண்டேன்! என் கலிவிண்டேன்! இனி எனக்கு ஜன்மமும் உண்டோ! பக்தவத்சலா! பரமதயாளு! உம்மைக் கட்ட அடியேனிடம் பக்தி என்னும் ஒரு சிறுகயிறு ஒன்று தான் இருக்கிறது; இதோ உமது ஆக்ஞைப்படிச் செய்கிறேன்! சரணம்! சரணம்! சாந்த மூர்த்தி! சத்தியமூர்த்தி! சகலலோக மூர்த்தி!

ஸ்ரீகி. ஹோ! சகதேவா! உன் சக்தியையும் மெச்சினேன்! உன் பக்தியையும் மெச்சினேன்—நீ மிகவும் இறுகக்கட்டி விட்டாய், பாதம் நோவுகிறது, இனி அவிழ்த்து விடுகுவாய்!

ச. ஆபத்பாந்தவா! அநாதரட்சகா! எனக்கு ஒருவரம் தந்தருள வேண்டும். இல்லாவிடின் உம்முடைய பாதத்தை விடேன்!

ஸ்ரீகி. கேளப்பா, என்ன வேண்டும் உனக்கு?

ஸ்வாமி! நாளை நடக்கப்போகிற குருக்ஷேத்திர யுத்தமென்னும் யாகத்தில் எல்லோரையும் படுசாம்பலாக்கும் பொழுது, பாண்டவர்களாகிய எங்கள் ஐவரை மாத்தி

ரம் உம்முடைய கடாட்சத்திலை ரட்சித்தருளவேண்டும் இதுவே நான் வேண்டும்வரம் !

ஸ்ரீகி. சகதேவா ! அப்படியே ஆகட்டும். பயப்படாதே எழுந்திரு !

ச. தன்யர்களானேம் ! தன்யர்களானேம் ! தயாளமூர்த்தி!

[பரந்தாமனைத் துதிக்கிருன், புஷ்பமழைபொழிகிறது.]

காட்சி முடிகிறது.

